Regd. No. ... 54
... ne: No. 21841

# ஜனசக்தி

ஆசிரியர்: ப. ஜீவானந்தம் JANASAKTHI
(காலைப் பதிப்பு)



மலர் 15 இதழ் 353] சென்னை 9-8-59 விகாரி ஆடி 24 ஞாயிற்றுக்கிழமை [4 பக்கங்கள் 7 காசுகள்

# உணவு நெருக்கடிக்குக் காரணம் கொள்கைக் கோளாறே

## காங்கிரஸ் சர்க்கார் கள்ளச் சேமிப்புக்கும் கொள்ளை லாபத்திற்கும் துணை நின்றது

### கள்ளச் சேமிப்பை ஒழித்து விலைகளைக் கட்டுப்படுத்துக

### சகல மட்டங்களிலும் மக்கள் உணவுக் கமிட்டி நிறுவுக

இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் மத்திய நிர்வாகக் கமிட்டி தீர்மானம்

புதுடெல்லி, ஆக. 8—

இன்று நாட்டில் ஏற்பட்டுள்ள உணவு நெருக்கடிக்குக் காரணம் மத்திய சர்க்காரும் ராஜ்ய சர்க்கார்களும் அனுசரித்து வரும் (படுமோசமான) பாபப்பிரதமான உணவுக் கொள்கையே என்று இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் மத்திய நிர்வாகக் குழு நிறைவேற்றியுள்ள ஒரு தீர்மானம் குறிப்பிடுகிறது.

காங்கிரஸ் சர்க்கார்களின் உணவுக் கொள்கை படுமோசம் என்று எடுத்துக் காட்டியது இத் தீர்மானம். நாட்டில் உணவு தானிய உற்பத்தி முன்பு என்றுமில்லாத அளவு அதிகரித்திருப்பதாக காங்கிரஸ் சர்க்கார் உரிமை பாராட்டுகிறது. அப்படியிருக்கையில் இவ்வளவு உக்ரமான அளவுக்கு உணவு நெருக்கடி வெடித்ததன் காரணம் காங்கிரஸ் சர்க்காரின் கொள்கை கோளாறுகளே என்று இத்தீர்மானம் கூறுகிறது.

**பதுக்கல்காரர்களுக்கு அனுமதி!**

மொத்த வியாபாரத்தை சர்க்கார் ஏற்று நடத்தியும், அறுவடைக்குப் பின் மார்க்கெட்டுக்கு வரவேண்டிய உபரி தானியங்களில் மிக மிகச் சிறுபகுதியைத் தான் சர்க்கார் கொள்முதல் செய்ய முடிந்திருக்கிறது. ஏகபோக வர்த்தகர்கள், மில் சொந்தக்காரர்கள், பெரிய நிலப்பிரபுக்கள் முதலியோர் அறுவடையான தானியத்தில் பெரும்பகுதியைப் பதுக்கிக் கொள்ள சர்க்கார் அனுமதித்தது என்று இத்தீர்மானம் கூறுகிறது.

இத்தகைய நிலை ஏற்பட மத்திய சர்க்கார் துணை நின்றது. அதோடு தனது செயல்களால் இத்தகைய நிலை ஏற்படவும் இடமளித்துள்ளது. நாட்டின் உணவு நிலைக்குப் பரிகாரம் காணும் விஷயத்தில் மத்திய உணவு அமைச்சர் துறை படுகேவலமான அசட்டை காட்டியிருக்கிறது, திறமையற்றுத் திண்டாடியுள்ளது என்று இத்தீர்மானம் சுட்டிக் காட்டுகிறது.

**ஆலோசனைக் கமிட்டி அர்த்தமற்றதாகி விட்டது!**

மத்திய ராஜ்ய சர்க்கார்கள் அனுசரித்து வந்த உணவுக் கொள்கையின் விலைவாக மக்களைச் சூறையாடும் பராசிரமஜீவிகள், சுரண்டும் வர்க்கதார் நகரங்களிலும் நாட்டுப்புறங்களிலும் திட்டமிட்டு பலம் தேடியுள்ளனர். மேலும் காங்கிரஸ் சர்க்கார்கள் உணவுக் கமிட்டிகளைப் பொதுஜனங்களைப் பிரதிபலிக்கும் முறையில் ஏற்படுத்த மறுத்தன; மீறி ஏதாவது கமிட்டிகள் நிறுவப்பட்டிருந்தால் அவற்றை உதவாக்கரையாக்கித் திறன் கெடச் செய்தன. பிரதமர் நேரு மத்திய சர்க்கார் உருவாக்கியுள்ள ஆலோசனைக் கமிட்டி அர்த்தமற்ற பிண்டமாகி விட்டது. பொதுமக்கள் ஒத்துழைப்பு விஷயத்தில் இவ்வாறு படுமோசமான எதிர்மறைப் போக்கு தாண்டவமாடுவதை மத்திய நிர்வாகக் கமிட்டி வன்மையாகக் கண்டிக்கிறது என்று அத்தீர்மானம் கூறுகிறது.

வியாபாரிகள், அரிசி மில் உடமையாளர்கள், நிலப்பிரபுக்கள் இவர்களிடம் குவிந்துள்ள தானியங்களை உடனே எடுத்துக் கொள்முதல் செய்ய வேண்டும். கள்ளச் சேமிப்பு, கள்ள மார்க்கெட் செய்வோர்களைக் கடுமையாகத் தண்டிக்க வேண்டும். போதிய அளவு நியாயவிலைக் கடைகள் திறக்கப்பட வேண்டும். எல்லா அவசியப் பொருள்களின் விலைகளும் குறைக்கப்பட்டுக் கட்டுப்படுத்தப்பட வேண்டும். எல்லா மட்டங்களிலும் மக்களைப் பிரதிநிதித்துவப் படுத்தும் உணவு ஆலோசனைக் கமிட்டிகள் நிறுவப் பெற்று சர்வ அதிகாரம் வழங்கப்பட வேண்டும் என்று இத்தீர்மானம் கோருகிறது.

பஞ்சம், பற்றாக்குறைப் பிரதேசங்களில் கள்ளச் சேமிப்பை எதிர்த்து இயக்கம் நடத்த வேண்டும். இப்பிரதேசங்களுக்கு உடனடி நிவாரணம் அளிக்கப்பட வேண்டும் என்றும் இத் தீர்மானம் வலியுறுத்துகிறது.

### ஹிந்துமகா சபை செயற்குழு உறுப்பினர் கைது

வாரணாசி, ஆக. 8—

டாக்டர் பகவான் தாஸ் அரோரா அகில இந்திய ஹிந்து மகா சபை செயற்கமிட்டி உறுப்பினர் இன்று கைது செய்யப்பட்டார்.

குறிப்பிட்ட சமூகத்தின் மத உணர்ச்சியைப் புண்படுத்தும் முறையில் நடந்து கொண்டதற்காக அவர் கைது செய்யப்பட்டார்.

ஹிந்துமகா சபையின் ஸ்தல செயலாளர் லால்ஜீ ஜெய்ஸ்வாலும் கைது செய்யப்பட்டார். (பி. டி. ஐ)

### உணவு இல்லாமல் சாகவில்லை, காலராவினால் மாண்டார்களாம்!

ஹைதராபாத், ஆக. 8—

சிகாகுளம் ஜில்லாவில் உள்ள கலப்பா கிராமத்தில் ஜூலை மாதத்தில் திடீரென்று 21 பேர்கள் இறந்து போன சம்பவம் பற்றி சுகாதார இலாகா விசாரணை செய்தது.

இந்த நபர்கள் காலரா போன்ற ஒரு நோயினால் பாதிக்கப்பட்டு இறந்து போனார்கள் என்று இலாகா தீர்ப்பளித்துள்ளது. இறந்து போன நபர்கள் உணவு கிடைக்காமல் மாங்கொட்டைப் பருப்பை உட்கொண்டதாலேயே மாண்டு போனார்கள் என்று ராஜ்ய சட்டசபையில் பிரேரணை கொண்டு வரப் பட்டு தள்ளுபடி செய்யப் பட்டது நினைவு கூறத் தக்கது.

## கலவரத்தில் கேரள அரசுக்கு ஒரு கோடி வரையில் நஷ்டமாம்

### மாணவர்கள் தேர்தலில் கலக்கக் கூடாதாம்

கலவரத் தலைவர் மன்னத்தின் அபிப்பிராயம்

கோவை, ஆக. 8—

மன்னத்து பத்மநாபன், விமோசன சமர சமிதி தலைவர், கேரளத்தில் எதிர்க்கட்சிகளால் நடத்தப்பட்ட கலவரத்தின் காரணமாக கேரள ராஜ்ய வருமானத்தில் குறைந்தபட்சம் 30 லட்சம் ரூபாய்க்கு நஷ்டம் ஏற்பட்டிருக்கும் என்றார்.

கலவர காலத்தில் கம்யூனிஸ்ட் அரசாங்கத்திற்கு ஒரு கோடி ரூபாய் வரையில் நஷ்டம் ஏற்பட்டிருக்கும் என்றும் அறிவித்தார். கோயம்பத்தூரிலுள்ள சில முக்கிய கேரள நபர்களிடம் பேசிக் கொண்டிருக்கும்போது இந்தத் தகவலை வெளியிட்டார்.

வருகின்ற பொதுத் தேர்தலில் மாணவர்கள் பங்கெடுப்பதும், மேடைகளில் பேசுவதும் தவிர்க்கப்பட வேண்டும் என்று மன்னம் குறிப்பிட்டார்.

## அகமதாபாத்தில் தியாகிகள் தினம்

### பம்பாய் அரசாங்கத்தின் மீது பரிஷத் குற்றப்பத்திரிகை

### நவம்பர் முதல் ஒத்துழையாமை இயக்கம் தொடங்கும்

அகமதாபாத், ஆக. 8—

மகா குஜராத் போராட்டத்தில் உயிர் துறந்த வீரர்களின் மூன்றுவது ஆண்டு நினைவு நாள் இன்று அனுஷ்டிக்கப்பட்டது. எல்லாக் கல்வி நிலயங்களும், வியாபார ஸ்தலங்களும், கடைகளும் அடைக்கப்பட்டிருந்தன.

**ஊரடங்குச் சட்டம்**

அகமதாபாத்திற்கு அருகிலுள்ள தோஹாத் நகரத்தில் ஊரடங்குச் சட்டமும், 144 தடை உத்தரவும் பிறப்பிக்கப் பட்டிருக்கிறது: இரண்டு கோஷ்டிகளுக்கிடையே ஏற்பட்ட மோதுதல்களின் விளைவாக இவ்வுத்தரவுகள் பிறப்பிக்கப்பட்டிருக்கின்றன. அகமதாபாத்திலும் காங்கிரஸ் ஆபீசைச் சுற்றி ஒரு பர்லாங் தூரத்திற்குள் ஐந்து பேர்களுக்கு மேல் கூடக் கூடாது என்று 144 தடை உத்தரவு பிறப்பிக்கப்பட்டிருக்கிறது.

**நினைவுச் சின்னம்**

மகா குஜராத் தலைவர், திரு இந்துலால் யக்னிக் போராட்ட வீரர்கள் உயிர் துறந்த நான்கு இடங்களில் நினைவுச் சின்னங்கள் நாட்டினார். தியாகிகளுக்கு வீர வணக்கம் செலுத்த ஆயிரக் கணக்கான மக்கள் திரண்டு வந்திருந்தார்கள். மக்கள் ஐந்து ஐந்து பேர்களாகச் சென்று தியாகிகளின் நினைவுச் சின்னங்களுக்கு மலர் மாலைகள் சூட்டினார்கள்.

**காங்கிரஸ் அரசாங்கத்தின் மீது குற்றப்பத்திரிகை!**

தியாகிகள் தினம் கொண்டாடப்பட்ட எல்லா இடங்களிலும் மகா குஜராத் ஜனதா பரிஷத் பம்பாய் சாவன் அமைச்சரவை மீது சாட்டப்பட்ட குற்றப் பத்திரிகை மக்கள் முன்னால் படித்துக் காட்டப்பட்டது. காங்கிரஸ் அரசாங்கத்தின் மீது பரிஷத் 26 குற்றச்சாட்டுக்கள் கூறியிருக்கின்றது.

**ஒத்துழையாமை இயக்கம்**

நவம்பர் மாதம் முதல் தேதியோடு இருமொழி ராஜ்யம் ஏற்பட்டு மூன்று ஆண்டுகள் ஆகின்றன. நவம்பர் மாதத்திற்குள் மகா குஜராத் மாநிலம் அமைக்கப்படாவிட்டால் அமைதியான முறையில் ஒத்துழையாமை இயக்கம் நடத்தப்படுமென அக் குற்றச் சாட்டில் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

அக்குற்றச் சாட்டில் "இருமொழி ராஜ்யத்தை மொழிவாரியாகப் பிரிக்காமல் 175 லட்சம் குஜராத்தி மக்களுக்கு காங்கிரஸ் அரசாங்கம் துரோகம் செய்து விட்டதென்றும், காங்கிரஸ்கட்சியைப் பலப்படுத்துவதற்காக பாரபட்சமாகவும், பயங்கரமாகவும் ஆட்சி நடத்தியிருப்பதாகவும் கூறப்பட்டுள்ளது. லஞ்சம், உறவினர்களுக்கு உதவி, அரசாங்க கமிட்டிகளில் காங்கிரஸ் கட்சியினருக்கு முக்கியத்துவம், எதிர்க்கட்சித் தலைவர்களை இழிவாக நடத்துதல் போன்ற குற்றச் சாட்டுக்களும் இடம் பெற்றிருக்கின்றன.

## காங். தேர்தல் புலி பட்டீல் கேரளம் வருகிறார்!

### காங்கிரஸ்-லீக் சந்தர்ப்பவாத உறவு உறுதிதானும்!

(நமது நிருபர் தந்தி)

திருவனந்தபுரம், ஆக. 8—

கேரள காங்கிரஸ் தேர்தல் வேலைகள் "தேர்தல் புலி" எஸ். கே. பட்டீலிடம் ஒப்படைக்கப்படும் என்று தெரிகிறது. தேர்தலில் அபேட்சகர்களை நிறுத்துவது, மற்றும் தேர்தல் சம்பந்தமான எல்லா வேலைகளும் அவரது மேற்பார்வையிலேயே நடைபெறும். இன்னும் சில தினங்களில் பட்டீல் இங்கு வந்து சேருவார்.

முஸ்லீம் லீக்கோடு எப்படி தேர்தல உறவு கொள்வது, அந்த சந்தர்ப்பவாத கூட்டுறவிற்கு எப்படி ஜனநாயக சாயம் பூசுவது என்பதுதான் காங்கிரசிற்கு பெரும் தலைவேதனையாக இருக்கிறது. காங்கிரஸிற்கும் முஸ்லீம் லீக்கிற்கும் நிச்சயமாக தேர்தல் உறவு ஏற்படும் என்று தெரிகிறது.

பட்டீலின் கேரளவருகை காங்கிரஸ் தலைமைப் பீடத்திற்கு பேருதவியாக இருக்குமாம். தேர்தல் உறவு சம்பந்தமாக காங்கிரசிற்குள்ள பிரச்னைகளைக் கிளப்பும்தலைவர்களுக்கு பட்டீல் விளக்கம் கொடுப்பாராம்.

### மன்னத்திற்கு பத்ம விபூஷணப் பட்டம்!

திருவனந்தபுரம், ஆக 8—

கேரள கலவரத் தலைவர் மன்னத் பத்மநாபனுக்கு மத்திய அரசாங்கம் "பத்ம விபூஷணம்" என்ற பட்டம் அளிக்கும் என்ற வதந்தி இங்கு உலவுகின்றது!

இந்தச் செய்தியைக் கேட்கும் மக்களெல்லாம் சிரிப்பாய் சிரிக்கிறார்கள். "இங்ஙனம் தேசப் பரிசுகள் வழங்கப் படுமானால், இந்த தேசம் வெகு விரைவில் கீழ் நோக்கிச் சென்றுவிடும். அதனால் ஆட்சித் துறையில் மாற்றம் ஏற்படுவதென்பது தவிர்க்க முடியாததாகிவிடும். அம்மாற்றம் முழுமையான சர்வாதிகார ஆட்சியில் தான் கொண்டு போய்விடும்" என்று பேசிக் கொள்கிறார்கள். (ந.நி.)



கேரள கம்யூனிஸ்ட் மந்திரி சபை வெளியேற்றப்பட்டதைக் கண்டித்து டில்லியில் ஆக. 3-ல் நடைபெற்ற பிரமாண்டமான ஊர்வலத்தின் ஒரு பகுதி. இந்தியா சுதந்திரமடைந்த பின்னர் இது வரையிலும் இவ்வளவு பெரிய ஊர்வலம் நடந்ததேயில்லை என்று டில்லி மக்கள் கூறினர். முன்னணியில் ஏ. கே. கோபாலன், ரேணு சக்ரவர்த்தி, பூபேஷ் குப்தா, எஸ். வி. காட்டே முதலிய கம்யூனிஸ்ட் தலைவர்கள் காணப்படுகிறார்கள்.

## இணைப்பு வைத்தியக் கல்லூரி மூடப்படும்

### மந்திரி மாணிக்கவேலர் மிரட்டல்

சென்னை, ஆக 8—

சென்னை இணைப்புவைத்தியக் கல்லூரியை திங்கட்கிழமை முதல மூடிவிடப் போவதாக சுகாதார மந்திரி திரு மாணிக்கவேலு இன்று பத்திரிகை நிருபர்களிடம் தெரிவித்தார்.

கடந்த ஆறு நாட்களாக இணைப்பு வைத்தியக் கல்லூரி மாணவர்கள் தங்கள் நியாயமான கோரிக்கைகள் நிறைவேறவேண்டு என்று வேலை நிறுத்தம் செய்து வருவது தெரிந்ததே.

எம். பி. பீ. எஸ். மாணவர்களுக்குச் சமமான பாடத்திட்டம் படிக்க வேண்டியிருப்பதால் இணைப்புவைத்தியதகுதிபெறும் டாக்டர்களுக்கு சமமான அந்தஸ்து கொடுக்கப்பட வேண்டும் என்றும், இன்னும் சில கோரிக்கைகள் நிறைவேற்றப்படவேண்டும் என்றும் மாணவர்கள் கோரியுள்ளனர்.

சில மாணவர்களின் பெற்றோர்கள் தம்மைச் சந்தித்ததாகவும், மாணவர்கள் உடனே வேலை நிறுத்தத்தை வாபஸ் பெறாவிட்டால் கல்லூரியை மூடிவிட உத்தேசித்துள்ளதாகவும் மந்திரி சொன்னார்.



### சி. ஐ. டி. க்கள் 'ஷேடோ' மீண்டும் தொடங்கியது

திருவனந்தபுரம், ஆக. 7—

அரசியல் கட்சிப்பிரமுகர்கள் அவர்களது காரியாலயங்கள் இவற்றில் நிழல்போல சி ஐ டிக்கள் ஷேடோ செய்யும் வழக்கம் போலீசாரால் இங்கு மீண்டும் தொடங்கப்பட்டிருப்பதாகத் தெரிகிறது. இந்த வழக்கத்தை கேரளத்தில் கம்யூனிஸ்ட் சர்க்கார் ரத்துச் செய்திருந்தது. இப்போது கம்யூனிஸ்ட் கட்சி காரியாலயத்தின் முன் சி. ஐ. டி. கள் முகாமடித்துள்ளனர்.

### பிரபல திருமணம்

வாஹினி, விஜயா அதிபர் திரு. பி. நாகிரெட்டியார் அவர்களின் புதல்வன் திருவாளர் பி. வேணுகோபால் அவர்களுக்கும், விஜயா புரொடக்ஷன்ஸ் டைரக்டர்களில் ஒருவரான திரு. பி. ரமண ரெட்டி அவர்களின் புதல்வி திருமதி பி. பத்மாவதிக்கும் 7—8—59-ந் தேதி இரவு விஜயா கார்டனில் வெகு சிறப்பாகத் திருமணம் நடந்தேறியது.

# புதுவைத் தேர்தல் நிதி அளித்தோர் விவரம்

'பெரிய பாளையம் பெரியகடை பஜார் துரைசாமி செயலாளர் ரு 3; சேலம் ஆர்ச்சனூர் தோழர் கணபதி ரு 1 மினாசாமி பெரியசாமி ரு 1 வே. சண். தி டெய்லர் ரு 2 பேட்டூர் அண்ணா காந்தி நகர் கிளை எ. கண்ணையன் செயலாளர் ரு 5 திருச்சி 79 சுண்ணாம்புகார செரு ஈ. வெங்கடாசலம் ஆசாரி ரு 5 திருச்சி தாராநல்லூர் கம்யூனிஸ்ட் கழக கிளை காரியதரிசி அழகு பெருமாள் ரு 5 திருப்பூர் பி. கருப்பண்ணன், பி. வேலுசாமி கவுண்டர் குமரன் வீதி சீதாலட்சுமி ஸ்டோர்ஸ் ஜவுளி ரு 5 தேவக்கோட்டை கழக கிளை தி. ஊரணிபளிகை சா. பூவநாதன் ரு 5 திருநெல்வேலி பதூர் தெற்கு மூத்தையாபுரம் ந. பி கணேசன் உதவிசெயலாளர் ரு. 5 திண்டுக்கல்ரோடு நெ. 177 ஆர். எம். டமுனிவேல் மூலம் ரு 5 தென்காசி கழக கிளை சார்பில் எம். குத்தால ராமன் செயலாளர் ரு 5 வத்தலகுதோட்டுப்பட்டி கிளை சதாசிவம் உ. செயலாளர் ரு. 5 திண்டுக்கல் ஏரியோடு கம்யூனிஸ்ட் ஆபீஸ் எம். வ. மஹிவேல் ரு 5 பள்ளிக்கொண்டா சி. என். கன்னியப்ப செட்டியார் ரு 5 கோவை கிருஷ்ணராஜபுரம் கே. குருசாமி செயலாளர் ரு. 5 திருவாளைக்காவல் குடைமார்க் சுருட்டு தொ.சங். பி. வைத்திலிங்கம் ரு 5 மரமடக்கி இந்திய கம்யூனிஸ்ட் கட்சிகளை மூலமாக வசூல் ரு 5 பின்னவாசல் கிளை கே. அருணாசலம் செயலாளர் ரு 5 சென்னை 12 புளியந்தோப்பு 33-வது வார்டுகிளை பி கிருஷ்ணன் ரு. 5 வேலூர் :தோட்டப்பாளையம் எஸ். பி. பீடி பிராஞ்சு கே. எத்திராஜ் ரு. 3 திருச்சி 31-எ. முதலியார் சத்திரம் டீ ஸ்டால் கிருஷ்ணன் ரு. 2 சேகரன் ரு 2 தங்கி ரு. 2 முதலியார் சத்திரம் வசூல் ரு 7-8-0 ஆக. ரு. 13-8-0 சென்னை 13-வது வட்டக்கிளை நெ. 3-158 லிங்கிச் செட்டி தெரு முத்தியால் பேட்டை கழக வசூல் ரு 6-8-0

சென்னை: ஹார்பர் ஒர்க்ஸ் யூனியன் டி. சாந்தப்பன் ரு 5; சென்னை 1/3 பிராட்வே, எஸ். வெங்கடாச்சாரி ரு 9-85; சென்னை ஹார்பர் எஸ். தங்கசாமி செயலாளர் ரு 4.

பம்பாய்: குர்லா ஏரியா ஏ. கே. ரோடு டி. குழந்தைசாமி ரு. 14-20; மேட்டுப்பாளையம் டவுன் கழக தோழர்கள் நைனார் முகம்மது ரு 5; பழனிசாமி ரு 1; கர்தசாமி எம் சி ரு 1; உஸ்மான் 1-50; சி ராமச்சந்திரன் ரு 1; பொன்னுமுத்து 0-8-0; அந்தோணி 0-8-0; சைதுமுகமது 0-8-0; எம். நஞ்சப்பன் ரு. 1; ஜி ராமசாமி 0-8-0; ரங்கசாமி 0-8-0; சீரங்கம் 0-8-0; எம். கே. கருப்பண்ணன் ரு 13-8-0; வீரபாண்டி என். மாரி செயலாளர் ரு 6; மதுரை 28, மேலப் பொன்னகரம் 10-வது வார்டு கிளை 7-வது தெரு, தோழர்கள் அ.செ. நடராஜன் ரு 1; தங்கையா ரு 2; டி.வ். கருப்பையா 0-8-0; சீனி 0-8-0 ராமையா ரு 1 டெய்லர்காளி ரு. 1; சோலையப்பன் 0 8-0; ராமமூர்த்தி 0 8-0 சுந்தரராஜன் 0-8-0 காசிபாய் 0-8-0; ராஜு 0-8-0. ஆக ரு 8-50 காட்பாடி, பிரமபுரம் பீடி மண்டி மு. கிருஷ்ணன் மூலம் ரு. 6; மணப்பாறை பிரகாசம் 4-4-0, தகரக் கடை அனிபா 0 8-0 ஆக ரு. 4-12-0.

பம்பாய். மாட்டுன்சி, வெங்கடேஷ் நிவேஸ், பிஹாண்டேஸ் ரோடு c/o விமல் ராணு தேவி, ஏ. சிவசைலம் மூலம் ரு 10; ஆம்பளாபட்டு, சவுன்கரம் w/o எஸ். வீ சிரங்கப ரு. 3; பல்லடம் கிளை ரா. ராமசாமி ரு 5; ராஜபாளையம் சம்மந்தபுரம் யூனிட் ஏ கணேசன் ரு 5; பரமக்குடி கிழக்கு ஏரியா எஸ். ஆர். ரங்கன் ரு. 5; தேவராயம்பாளையம் கிளை எச். எம். அப்ஜத் ரு 5; திருநெல்வேலி, புதுக்குப்பபட்டு சி. அருகநாதன் ரு. 1; கீழ்வாணி கழக கிளை எம். என். காளியண்ணன் ரு. 5;

பெங்களூர் ஏ. பாரிமூலம் ரு 5; பரமக்குடி எம். கே. சாமி ரு. 5, சென்னை தியாகி பாலு நினைவுமன்றம் எம் குப்புசாமிரு 5; வடஆற்காடு பள்ளிக்கொண்டா மண்டபம் விரபாகரன் ரு. 5; நீலகிரி (எம்.எஸ்.) தேவர்ஷலா கம்யூனிஸ்ட் கழக காரியதரிசி ரு 5; கோவை சின்னியம்பாளையம் செயலாளர் மூலம் ரு. 5; பரமக்குடி மத்தியப்பகுதி டி.வி. கோவிந்தராஜன் ரு.5; பெரியகுளம் பச்சக்காமச்சி பி. ஓ. தோட்ட தொ. சங். எஸ. கே. சுப்ரமண்யம் ரு 5; மதுரைஆலக்குடி (பழனி டி.கே ) கழககமிட்டி மு. கணேசன் ரு 5; பரமக்குடி டவுன் கமிட்டி, பி. ஆர். வெங்கடபதி ரு. 5-8; நெல்லிக்குப்பம், மேட்டுப்பாளையம் ஜீ மாணிக்கம் ரு 5; சேலம் பி. குமாரப்பாளையம் எம். பழனிசாமி ரு 5; கோவை புலியகுளம் 3, 6-வது வட்டக்கிளை சின்னபபன் ரு 5: கரூர் காமாட்சியம்மன் கோவில கிளை பி. சுப்பராயலு ரு 5; கர்னூல் காலனி கழகக் கிளை செட்டியார் மூலம் ரு. 10; ஈரோடு அந்தியூர் சிங்கார வீதி டி. எம். வெங்கடாஜலம் ரு. 2; திருப்பூர் 15-3 ராமநகர் மாடன் டயர் ஒர்க்ஸ் மேனஜர் மாரிமுத்து ரு 3, எஸ் மாரப்பன் ரு 5; போடி வழி ராசிங்கபுரம் பி ஓ நாகலாபுரம் அ. ராமசாமி கவுண்டர் ரு 2; மதுரை பி. மீனாக்ஷிபுரம் கிளை வரவு ரு. 5; மதுரை ஆணைக்கரைப்பட்டி கிளை ரு. 5; சோழவந்தான் கட்சிக் கிளை உலகபடன் ரு 5.

புத்தூர் எம். ராமலிங்கம் ரு 5; மேற்கு சென்னை ஏரியா ஜி. பி. எஸ். ராஜன் செயலாளர் ரு 10; பட்டுக்கோட்டை குணமங்கலம் கழக சார்பில் எம். சுந்தரராஜன் ரு. 3; பொன்மலை எம், நாராயணசாமி 2; ராஜபாளையம் பழையபாளையம் பி கே விஜயன் மூலம் ரு 3; அரக்கோணம் புதுப்பேட்டை காரியதரிசி மூலம் ரு 5; வாகர் வளையபட்டி க.பி. ராமையா ரு 5; மதுரை பழய கொசவப்பாளையம் சி. சௌந்திரபாண்டியன் ரு 5; மதுரைமேற்கு பொன்னகரம் டி. வி. கருப்பையா ரு 5 சிதம்பரம் கழக ஆபீஸ் பி கே. நரசிம்மன் ரு 5; மணமல்குடி தண்டலை டீ. நடராஜன் ரு 5 நாகப்பட்டினம் பி. எஸ். கணபதி சுப்ரமணியம் மகாலிங்கம் ரு. 5; பட்டுக்கோட்டைகம்யூனிஸ்டு கிளை கே. அய்யாகண்ணு ரு. 5; தெ. ஆ. (நெல்லிக்குப்பம்) கீழ்பட்டாம்பாக்கம் தோழர்கள் ஏ. கண்ணன் ரு. 1; தட்சணாமூர்த்தி ரு 1; வைத்தியநாதன் ரு. 1; ராமாநுஜம் ரு. 1; சுப்புராயன், தனகோடி, துரை ஆழ்வார் ரு. 2; தஞ்சை நகரக் கிளை கழக உறுப்பினர் டி. வி, முருகையன் ரு 5.

சேலம் 1 கம்யூனிஸ்ட் கட்சி எம். கலியாணசுந்தரம் ரு 5 போத்தனூர் நியூடவுன் காரியதரிசி சுப்ரமணியன் ரு 5 ராஜபாளையம் ரெட்டிப்பட்டி கிளை காரியதரிசிரு 5, சென்னை-26 92வது வட்டகிளை செல்லப்பா ரு 5 தூத்துக்குடி 3 பி மேலசண்முகபுரம் கே. பலவேசம் ரு. 5 திருப்பூர் ரெடியல்மர்சன் சீதம்மாள் ரு 5 தாம்பரம் இந்திய கம்யூனிஸ்ட் கட்சி செயலாளர் ரு. 5 கோவை. காந்திபுரம் பொதுஜன சேவாட் பங்குலிங்கம் பளிகை, ஷாப் நிலையம் சி. எம். உலகநாதன் ரு 5 தெ. ஆ. நெய்வேலி கம்யூனிஸ்ட் கட்சிஎன் ரத்தினசாமி ரு 5 தஞ்சை வாடியக்காடு கழக கிளை கே. என். கோவிந்தராசு ரு. 5, வேலூர் செண்பாக்கம் எஸ். பி. வெங்கடேசன் ரு. 5 எமனேஸ்வரம கம்யூனிஸ்ட் கட்சி காரியதரிசி கிருஷ்ணமூர்த்தி ரு 5, ஆறுமுகநேரி கம்யூனிஸ்ட் கடசி காரியதரிசி எ. கே. ஜனார்த்தி முத்து ரு 5 கீரனூர் கம்யூனிஸ்ட் ஆர். முத்துசாமி ராஜா ரு 5, திருச்சி (தெப்பகுளம்) எம். கே. வாசகசாலை கிருஷ்ணசாமி ரு. 5, இளயான்குடி விவசாய சங்கம் ஆர். பாண்டிமூலம் ரு. 5, கோ. புதூர்கிளை ஜி. வேலுசாமி ரு 5, இடலாக்குடி காரியதரிசி ரு. 5, குளித்தலை கட்சிக் கிளை கே. கோபால் ரு 5, பவானி நகரசுத்தி தொழிலாளர் சங்கம் ரு 5, சென்னை 14வது வட்டக் கிளை பி எஸ். ராமமூர்த்தி 5 தி. நகர் கிளை கே. பார்த்தசாரதி 5 சேலம் வளிகம் விளாசம் தர்மாபுரி விவசாய சங்கம் ரு 5, கோபாலபுரம் விவசாய சங்க காரியதரிசி கே. வி. ஸ்ரீராமுலு ரு 5, ஏலகிரியான் கொட்டாய் செயலாளர் பி. பெருமாள் ரு. 3 கன்னியாகுமரி ஏராமல் கிளை காரியதரிசி சி. ஜனார்த்தனம் ரு 3, எமனேஸ்வரம் வடக்கு கிளை பி. பி. ராமானுஜன் மூலம ரு 4, பொத்தமேட்டுப்பட்டி டி. சந்தியாகு டீ ஸ்டால் ரு 1, சென்னை புதுப்பேட்டை ராமதாஸ் ஹோட்டல் தொழிலாளர் ரு 9, திருவத்தியூர் கிளை டாக்டர் எஸ். கிருஷ்ணமூர்த்தி செயலாளர் ரு. 10, நாகர் கோயில் பி. சிவலிங்கன் தன் மூலம் ரு. 10, பம்பாய் கோலாலேன் போர்ட் எம். எஸ். ஆர். சுவாமி மூலம் ரு 10, 1. மணப்பட்டி கிளை காரியதரிசி ரு. 3, ரெ. சாங்கக் கவுண்டர், 2 கிழப் பொய்கைபட்டி கிளை அய்யாகண்ணு ரு /5- ஆக பொத்தம் ரு. 8, நாசரேத் கம்யூனிஸ்ட் கட்சி கிளை வ. வ. பணி ரு 12-20, பெயர் தெரியாத ஒருவர் அனுப்பியது ரு. 2-62 மதுரை NCBH பிராட்வே 10, வெஸ்ட்டவா கட்சி தோழர்கள் எம். கருப்பையா ரு. 3; எம். பி. பிசாரதி ரு 3; ஆர். பி. சந்திரா ரு. 2; எம். ராஜரத்தினம் ரு 3; பி என், மேனேஜர் ரு 1; அனுதாபி :ரு ஆக ரு 13; கூனூர் ஆர். எஸ். கிளை காரியதரிசி மூலம் ரு 15; சென்னை ப்ரோக்கிரசிவ் பிரிண்டர்ஸ் தொழிலாளர்கள் அளித்ததும் டி. ஏழுமலை, பி. எம். லோகநாதன் ஆக ரு. 20; கோவை தேவி ஸ்டால் c/o பாரத் பவன் தா. கிருஷ்ணன், டி. ஆர். கிருஷ்ணன் ரு 20; சேலம் தவுலதாபாத் கிருஷ்ணகிரி நர்சிங் ஹோம டாக்டர் என். அமராஜி ரு. 25; சேலம் 5 ஜாகிரம்மாபாளையம எஸ். ராமன் காரியதரிசி ரு 10; நெல்லிக்குப்பம் (தெ. ஆ.) வள்ளாபட்டு ஆர். பங்காரு மூலம் ரு. 10; கிருஷ்ணகிரி வாணியம்பாடி ஓட்டல் பி. ராஜப்ப பிள்ளை ரு 10; மதுரை எம். நைனா முகம்மது ரு 10; கோவை கணபதி செயலாளர் ரு. 6; மதுரை மேலப பொன்னகரம் ஆர். எஸ். மணி செயலாளர், டி. வி. கருப்பையா ரு 10; மதுரை மேலக்கால் கச்சிராயிருப்பு வி ராஜு ரு 5; மதுரை திண்டுக்கல் ரோடு பொது மக்கள் நன்கொடை கே. கே. கிருஷ்ணன் ரு 1; கேசவன் ரு. 1; மதுசூதனன் ரு 1; ஆக ரு 3; திருச்சி மூத்தரசநல்லூர் எஸ். பி. சுப்ரமணியன் ரு 1; எஸ் ராமநாதன் ரு 2; திருப்பூர் புதூர் திரு. வி. க. படிப்பகம் சார்பில் ரு 5; 3, 4, 5, 6 வார்டு ரு. 5; அனுதாபி ரு 1; ஆக ரு 11; குனச்செக்ஹாரம் தோழர் ஏ.பீஜ. ராஜு மூலம் ரு. 5; திருப்பூர் 16, 17 கிளை வி. கிட்டப்பன் மூலம் ஆர். காளியப்பா ரு 5; திருவத்தியூர் ஹைரோடு எஸ். கிருஷ்ணமூர்த்தி ரு 5; மதுக்கரை கிளை கூட்டுறவு டீ கடை தொழிலாளர் அண் ஏ. சி. சி. தொழிலாளர்கள் ரு 5; சங்கரநயினார்கோவில் சங்குபுரம் எஸ். கிருஷ்ணன் ரு 5; பாளையங்கோட்டை கம்யூனிஸ்ட் கட்சி கிளை வி. ஜேகோப் ரு 5; கடயம்பட்டி கம்யூனிஸ்ட் பார்டி பி. மணியப்பன் ரு 5; திருநெல்வேலி பொதுக்குடி அம்பாசமுத்திரம் விவசாயசங்க காரியதரிசி ரு 5 (கரூர்) வெண்ணைமலை பசுவதி வி. வ. ச. காரியதரிசி மூலம் ரு 5. சென்னை 23-வது வார்டு கிளை செயலாளர் வி. கே. சுப்பிரமணி மூலம் ரு 5, சென்னை திருவல்லிக்கேணி 76-வது கிளை ஆர். சுந்தரமூர்த்தி மூலம் ரு 5, சென்னை 56-வது டிவிஷன் கிளை காரியதரிசி மூலம் ரு 5, மேட்டூர் அணை (ஆர். எஸ்) தேசாய் நகர் கிளை கே. ஆர். குருநாதன் மூலம் ரு 5, விளாங்குடி கம்யூனிஸ்ட் கட்சிக் கிளை காரியதரிசி எம். அதின் ரு. 5, மதுரை கோம்பை கிளை ஏ. மணி உதவி காரியதரிசி ரு 5, மதுரை கோட்டைமேடு எல் ராமானுஜம் செயலாளர் மூலம் ரு 5 திண்டுக்கல் அய்யலூர் கிளை ஆபீஸ் காரியதரிசி மூலம் ரு 5, கரூர் புதுப்பாளையம் கிளை சார்பாக கே. கண்ணப்பன் மூலம் ரு 5.

# கேரளத்தில் மத்திய சர்க்கார் தலையீட்டை கண்டித்து தமிழகமெங்கும் ஆர்ப்பாட்டம்

### தாராபுரம்

தாராபுரத்தில் 3-8-59 அன்று கேரளத்தில் மத்திய சர்க்கார் தலையீட்டைக் கண்டித்து மாபெரும் ஊர்வலமும் பொதுக்கூட்டமும் நடைபெற்றன.

பல ஊர்களிலிருந்தும் மக்கள் ஊர்வலமாக நகரத்திற்கு வந்தார்கள். தாராபுரத்திலிருந்து 20 மைல்களுக்கப்பாலுள்ள கிராமங்களிலிருந்தெல்லாம் மக்கள் சைக்கிளில் ஊர்வலமாக வந்தனர்.

நகரமே இதுவரையில் கண்டிராத பிரம்மாண்டமான ஊர்வலம் இந்திய கம்யூனிஸ்ட் கட்சி காரியாலயத்திலிருந்து புறப்பட்டு, கோவிந்தன் வாள் அறிமுமுகங்களையும் நகரத்தின் முக்கிய வீதிகளையும் வலம் வந்தது. மாலையில் இஸ்லாமியாபேட்டையில் பொதுக்கூட்டம் நடைபெற்றது. கூட்டத்திற்கு மோட்டார் தொழிலாளர் சங்கக் காரியதரிசி தோழர் தண்டபாணி தலைமை தாங்கினார். தோழர்கள் கே. கோவிந்தசாமி, பழனிச்சாமி, எஸ். லிங்கசாமி ஆகியோர்கள் கேரளத்தில் ஏற்பட்ட வகுப்புவாதக் கிளர்ச்சியின் தன்மையை விளக்கியும், மத்திய சர்க்கார் தலையீட்டைக் கண்டித்தும் பேசினார்கள்.

### பத்தமடை

நேற்று மூன்று தினம் இங்கு கேரளத்தில் மத்திய சர்க்கார் தலையீட்டைக் கண்டித்து பஸ் ஸ்டாண்டிலிருந்து ஒரு சைக்கிள் ஊர்வலம் நடைபெற்றது.

### திருபுவனம்

இங்கு நேற்று முன் தினம் கேரளத்தில் மத்திய சர்க்கார் தலையீட்டைக் கண்டித்து 150 பேர்களுக்கு மேல் சைக்கிளில் ஊர்வலமாக வந்தனர். முத்துசாமி தலைமையில் நடைபெற்ற கூட்டத்தில் ராமமூர்த்தி, உலகநாதன் முதலியோர்பேசினார்கள்.

### பூலத்தூர்

ஆக. 3ந் தேதி இங்கு 500 பேர்கள் கொண்ட கண்டன ஊர்வலம் நடைபெற்றது. கொடைக்கானல் தாலுகா பூலத்தூர் வி.ச. சார்பில் நடந்த இவ்வூர்வலத்தைத் தொடர்ந்து மன்றப்பாறை மைதானத்தில் பொதுக்கூட்டம் நடைபெற்றது. மத்திய சர்க்கார் தலையீட்டை எதிர்த்துப் பலர் பேசினார்கள்.

### குடுமியாமலை

திருச்சி ஜில்லா குடுமியாமலை கம்யூனிஸ்ட் கட்சியின் சார்பில் கண்டன ஊர்வலமும், பொதுக்கூட்டமும் ஆக. 3ந் தேதி நடைபெற்றன. ராம பிச்சை தலைமையில் அ. அடைக்கன், ஆர். சாமிக்கண்ணு, ஜோசப், ராஜு, மு. அருணாசலம் ஆகியோர் பேசினார்கள்.

### மதுக்கூர்

கேரளாவில் ஜனாதிபதி ஆட்சி திணிக்கப்பட்டதை கண்டித்து 20 தபால் கார்டுகள் மதுக்கூர் கிராம விவசாயிகள் இந்திய ஜனாதிபதிக்கு அனுப்பியுள்ளனர்.

### காவேரிப்பாக்கம்

காவேரிப்பாக்கத்தில் 3-8-59-ம் தேதி பொன்ரங்கம் பூங்கா அருகிலிருந்து தோழர் கே. உலகநாதன் தலைமையில் மாபெரும் ஊர்வலம் புறப்பட்டுநகரின்மூக்கியவீதிவழியாகச் சென்று பொதுக்கூட்டம் நடக்கும் இடத்தை அடைந்தது. ஊர்வலத்தில் கம்யூனிஸ்ட்கட்சித் தோழர்களும், பீடித் தொழிலாளர்களும் பங்கெடுத்தனர். பொதுக்கூட்டத்தில் கேரளத்தில் ஜனாதிபதி ஆட்சியைத், திணித்ததைக் கண்டித்தும், சென்னை மாநிலத்திலிருந்து பீடி முதலாளிகள் ஆந்திரத்திற்குப் போய் தொழில் நடத்துவதை சென்னை சர்க்கார் தடுக்க வேண்டுமென்றும், காவேரிப்பாக்கத்தில் 500 பேருக்கு ஒரு நியாயவிலைக் கடைகள் திறந்து படி அரிசி 12 அணாவுக்கு கொடுக்க சென்னை அரசாங்கம் ஏற்பாடு செய்ய வேண்டுமென்றும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

### ஜெயங்கொண்டம்

4-8-59-ல் ஜெயங்கொண்டம் காந்தி பூங்காவில் நடந்த கண்டன ஊர்வலம், பொதுக்கூட்டம் இவற்றில் கம்யூனிஸ்ட் கட்சியும் தி. மு. க.வும் கலந்து கொண்டன.

கம்யூனிஸ்ட்களும் தி. மு. க. வினரும் தங்கள் தங்கள் கட்சிக் கொடிகளைப் பிடித்துக் கொண்டு "ஜனநாயகப் படுகொலையாளர்கள் ஒழிக" "கேரள ஜனநாயக ஆட்சியைக் கவிழ்த்த காங்கிரஸ் ஆட்சி ஒழிக" என்ற முதலிய கோஷங்களுடன் ஊர்வலம் வந்தனர். 1000 பேர் ஊர்வலத்தில் கலந்துகொண்டனர். பொதுக்கூட்டத்தில் 3000 பேர் கலந்து கொண்டனர். மத்திய சர்க்காரின் தலையீட்டைக் கண்டித்து தோழர்கள் செல்லப்பன், காட்டுமன்னார்குடி வி. ராஜகோபால், ஜெயங்கொண்டம் தி. மு. க. வைச் சேர்ந்த நடேசபிள்ளை முதலியவர்கள் பேசினர்.

### அம்பாப்பூர்

4-8-59-ல் அம்பாப்பூரில் கிராமவிவசாய சங்கத்தின் கூட்டம் ஆர். சரவணன் தலைமையில் நடைபெற்றது. கேரளத்தில் மத்திய சர்க்காரின் தலையீட்டைக் கண்டித்து தீர்மானம் நிறைவேறியது.

### பெரியகுளம்

3-8-59-ல் பெரியகுளத்தில் பிரம்மாண்டமான ஆர்ப்பாட்ட ஊர்வலம் நடந்தது. கல்லுப்பட்டி, ஜெயமங்கலம், புதுப்பட்டி ஆகிய ஊர்களிலிருந்து மக்கள் ஊர்வலமாக வந்தனர். அவ்வூர் கம்யூனிஸ்ட் ஊழியர்கள், தொழிலாளர்கள், விவசாயிகள் ஆகியோர் ஒன்று திரண்டு ஊர்வலமாகப் புறப்பட்டனர். மத்திய சர்க்கார் தலையீட்டைக் கண்டித்த கோஷங்கள் கிளப்பப்பட்டன. பிறகு பொதுக்கூட்டம் நடந்தது. தோழர் பழனியப்பா, எஸ். என். பழனிசாமி, புதுப்பட்டி கிருஷ்ணாராயணசாமி முதலியோர்மத்திய தலையீட்டைக் கண்டித்துப் பேசினர்.

### நாகர்கோவில்

3-8-59-ல் நாகர்கோவிலில் கண்டன ஊர்வலமும் பொதுக்கூட்டமும் நடைபெற்றன. ஊர்வலத்திற்கு தோழர் பி. எஸ். மணி தலைமை வகித்தார். ஊர்வலம் நகரின் முக்கிய வீதிகளை சுற்றி பொதுக்கூட்டம் நடக்கும் இடம் வந்து சேர்ந்தது. பொதுக்கூட்டத்தில் 16 ஆயிரம் பேர் கலந்து கொண்டனர். தோழர் டி. சங்கர் தலைமை வகித்தார்.

தோழர்கள் எஸ். தங்கையா, பி. என். வேலுதாஸ், ஆர். பாலகிருஷ்ண நாயர் மத்திய சர்க்காரின் தலையீட்டைக் கண்டித்துப் பேசினர். கண்டனத் தீர்மானம் ஒன்றும் நிறைவேறியது.

### படிவீஸ்புரம்

படிவீஸ்புரத்தில் 5000 பேர் கொண்ட மாபெரும் கூட்டம் நடந்தது. ஆர். சோமு தலைமை வகித்தார். எம். அலி, திருமதி சாரதா, அவனுகுடி சாமிவேலு சிவம் எம். எல். முதலியோர் பேசினர்.

கேரளத்தில் தலையீட்டைக் கண்டித்தும் விவசாயிகள் ஏற்றத்தைக் கட்டுப்படுத்த வேண்டுமெனக் கோரியும் தீர்மானங்கள் நிறைவேறின.

### குன்னூர்

3-8-59-ல் குன்னூரில் ஊர்வலமும் பொதுக்கூட்டமும் நடந்தன.

பொதுக்கூட்டத்தில் தோழர் கே ராஜன் தலைமையில் கே. நடேசசாமி பேசினர். மத்திய சர்க்காரின் தலையீட்டை எதிர்த்து ஜனநாயக சக்திகள் ஒன்று பட்டு இயங்கவேண்டுமென்று ஒரு தீர்மானம் நிறைவேறியது.

### ஏரல்

கேரளத்தில் மத்திய சர்க்கார் தலையீட்டைக் கண்டித்து 4-8-59 ஏரல் வண்டிப்பேட்டை மைதானத்தில் தோழர் முத்துசாமி தலைமையில் பொதுக்கூட்டம் நடந்தது.

தோழர்கள் எஸ். காமாட்சி, கே. சங்கரன் பேசினர்.

கேரளத்தில்மத்தியதலையீட்டைக் கண்டித்தும் தண்டத் தீர்வையை ரத்து செய்யக் கோரியும், நியாய விலைக் கடைகளில் 15 மூட்டை அரிசி போடவேண்டுமென்று கேட்டுக்கொண்டும் தீர்மானங்கள் நிறைவேறின.

### ஆறுமுகநேரி

3-8-59ல் ஆறுமுகனேரியில் தோழர் டி. எஸ். வேலன் தலைமையில் பொதுக்கூட்டம் நடந்தது. டி. எஸ். வேலன் தலைமையில் பி. ஜாக், எஸ். பூலலிங்கம், எஸ். வெள்ளைச்சாமி ஆகியோர் பேசினர். கேரளத்தில் ஜனாதிபதி ஆட்சி திணிக்கப்பட்டதைக் கண்டித்து தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

### மாயூரம்

3-8-59ல் மாயூரத்தில் கேரளத்தில் ஜனாதிபதி ஆட்சி ஏற்பட்டதைக் கண்டிக்க ஊர்வலமும் பொதுக் கூட்டமும் நடந்தன. தோழர் வி இருஞ்சைசாமி தலைமை வகித்தார். 5000க்கு அதிகமான மக்கள் கூடியிருந்தனர். சுப்பாமணியம், வி. கே. முத்துசாமி பேசினர்.

தோழர் கே. அனந்தநம்பியார் பேசுகையில் "அரசியல் நிர்ணயச் சட்டத்தின் 356வது பிரிவு மத்திய சர்க்கார் தலையிட்டு ஜனாதிபதி ஆட்சியை ஏற்படுத்தியது இந்த ஷரத்தை ஜனநாயக ரீதியில் திருத்திட வேண்டும் வைத்திருக்கிறது. இதிலிருந்து மீட்டிடுவது ஜனாதிபதியையே நீக்கிவிட்டு ஒரு சர்வாதிகாரி அதிகாரத்திற்கு வர முடியாது என்பதற்கு என்ன உத்தரவாதம் இருக்கிறது என்று கேட்கிறேன்" என்றார்.

ஜனாதிபதி ஆட்சியை கண்டனத்தைக் கண்டித்து ஒரு தீர்மானம் நிறைவேறியது.

### தர்மபுரி

3-8-59ல் தர்மபுரியில் தோழர் சி. ஜோதிநாதன் தலைமையில் பொதுக் கூட்டம் நடந்தது. கேரளத்தில் தலையீட்டைக் கண்டித்து தீர்மானம் நிறைவேறியது.

சேலம் மூன்று தாமரை பேக்டரியை மூடியதைத் திறந்து தொழிலாளர்களுக்கு வேலை அளிக்க வேண்டுமென்று அதிகாரிகளை வேண்டிக்கொள்வதாகவும் தீர்மானம் நிறைவேறியது.

# யூனியன் தேர்தல் கமிஷன், சுப்ரீம் கோர்ட் அதிகாரங்களை காஷ்மீருக்கு விஸ்தரித்தல்

## ஜனநாயக தேசிய மாநாடு வற்புறுத்தல்

ஸ்ரீநகர், ஆக. 7—

யூனியன் தேர்தல் கமிஷன், சுப்ரீம் கோர்ட் முதலியவற்றின் அதிகார வரம்புகளை காஷ்மீருக்கும் விஸ்தரிக்கச் செய்யவும் காஷ்மீர் உயர்நீதி மன்றத்தின் அந்தஸ்தை இதர ராஜ்யங்களின் உயர்நீதி மன்றங்களின் அந்தஸ்துக்கு இணையாக உயர்த்தச்செய்யவும் உரிய அரசியல் சட்ட நடவடிக்கைகளை காஷ்மீர் அசெம்பிளியின் அடுத்த கூட்டத்தொடரில் எடுக்கவேண்டுமெனக் காஷ்மீர் ஜனநாயக பக்ஷி குலாமைக் கேட்டுக்கொள்ளும் தீர்மானம் ஒன்றை ஜனநாயக தேசிய மாநாட்டின் மாகாணக் கமிட்டி நிறைவேற்றியுள்ளது

ராஜ்யத்தில் வெள்ளப்பெருக்கு காரணமாகப் பெரும் சேதங்கள் ஏற்பட்டிருக்கின்றன; பாதிக்கப்பட்டவர்களுக்கு உதவிகள் அளிப்பதில் அரசாங்கத்துடன் முழுதுமாக ஒத்துழைப்பதாக மாநாட்டின் இன்னொரு தீர்மானம் கூறுகிறது. நியாய விலைக் கடைகள் திறப்பு, உணவு விலைகளை ஸ்திரப்படுத்தல், இலவச உணவு ரேஷன் விநியோகம் முதலிய நடவடிக்கைகளை உசிதம் போல் எடுக்கவேண்டுமெனவும் மாநாடு ஆலோசனை கூறியுள்ளது.

மாநாட்டின் மூன்று நாட் கூட்டம் நேற்று முடிவடைந்தது.

### உ.பி. மந்திரிசபை மீது நம்பிக்கையில்லாத் தீர்மானம்

லக்னௌ, ஆக. 7—

உத்தரப் பிரதேச சம்பூர்ணானந் அமைச்சரவைமீது கொண்டுவரப்பட்ட நம்பிக்கையில்லாத் தீர்மானம் சட்டசபையில் நிராகரிக்கப்பட்டது.

சவான் மந்திரி சபையை ராஜினாமா செய்யக் கோரி பம்பாயில் நடந்த மகாராஷ்டிர சமிதியின் பிரம்மாண்டமான ஊர்வலம்

# பம்பாய் சட்டசபை ஒத்திவைத்த விபரம்

## சட்டசபை அதிர எதிர்க்கட்சி அங்கத்தினர்களின் கோஷம்

### (நமது விசேஷ நிருபர் தரும் தகவல்)

பம்பாய், ஆக. 3—

இன்று ஒரு மணிக்கு சட்டசபை ஆரம்பித்ததும், "பம்பாய் உள்ளிட்ட சம்யுக்த மகாராஷ்டிரம் அடைந்தே தீருவோம்" என்று சட்டசபைக் கட்டடமே அதிரும்படியாகக் கோஷங்கள் எழுப்பினர் எதிர்க்கட்சி அங்கத்தினர்கள். அதைத் தொடர்ந்து "எஸ்வந்தராவ் சாவனே (பம்பாய் முதலமைச்சர்) ஓடிப்போ என்ற கோஷம். சபாநாயகர் 5 நிமிஷங்கள் சபையை ஒத்தி வைக்கவேண்டியதாயிற்று.

மைசூர் ராஜ்யத்துடன் எல்லைத் தகராறைத் தீர்க்கத் திறமையற்ற சாவனே ராஜினாமா செய்யக்கோரி, 2000 க்கும் மேற்பட்ட மக்கள் ஆணும் பெண்ணுமாக ஊர்வலமாக வந்தனர். சட்டசபைக் கட்டிடத்திற்கு ஒரு பர்லாங்கிற்கப்பால் அம்மக்களைத் தடுத்து நிறுத்திவிட்டது போலீஸ். கோட்டை பகுதியில் இன்று பலத்த பந்தோபஸ்து வைக்கப்பட்டிருந்தது.

எல்லைத் தகராறை உடனே தீர்க்கவேண்டியும் சம்யுக்த மகாராஷ்டிரம் தரவேண்டியும் சுமார் 2 மணி நேரங்கள் கோஷங்களை முழக்கினர் மக்கள்.

இதே சமயத்தில், சமிதி அங்கத்தினர்களும் மகா குஜராத் ஜனதா பரிஷத் அங்கத்தினர்களும் சட்டசபைக்குள் பலத்த கோஷங்களை எழுப்பவே, முதன் மந்திரி சாவன் இன்று சட்டசபையை ஒத்திவைக்கவேண்டியதாயிற்று. பின்னர் சமிதி, மகா குஜராத் ஜனதா பரிஷத் சட்டசபை மெம்பர்கள் ஊர்வலமாக வந்து, திரளாகக் கூடியிருந்த மக்களைச் சந்தித்தனர்.

எதிர்க்கட்சித் தலைவர் தோழர் வி.டி தேஷ்பாண்டே (சி.பி ஐ) திரு. எஸ். எம். ஜோஷி (பி.எஸ். பி) உத்தவ் ராவ் படீல் (பி. டபுள்யூ பி.), திரு ஆர். டி. பண்டாரே (ரீபப்ளிக்), திரு. டி. ஆர் நரவனே (காங்கிரஸ்-ஜனபரிஷத்) திரு தத்தா தேஷ்முக் (லால் நிஷான்), திரு. புஷ்பேந்திர மோடி (மகா குஜராத் ஜனபரிஷத்), ஆச்சார்ய பி. கே. ஆத்ரே (மக்கள் முன்னணி) முதலியோர் இருமொழி ராஜ்யத்தை உடைத்து பம்பாய் உள்ளிட்ட சம்யுக்த மகாராஷ்டிரம் அமைக்க இனி நடத்தும் போராட்டங்களுக்குத் தயாராவீர்! எனப் பேசினர். —ந நி.

## அந்நிய நாணயச் செலாவணி விதிகளை மீறப்பட்ட வழக்குகள்

### தொகை எவ்வளவு?

### விவரம் இல்லை

புதுடில்லி, ஆக. 4—

1959 ஜூன், ஜூலை மாதங்களில மத்திய நிதிமந்திரி அலுவலகத்தைச் சேர்ந்த சட்ட அமுல் டைரெக்டர் காரியாலயம், அந்நிய நாணயச் செலாவணிக் கட்டுப்பாட்டுச் சட்டத்தின் விதிகள் மீறப்பட்டது விஷயமாகத் தொடரப்பட்ட 47 வழக்குகளில் தீர்ப்பளித்து, கம்பெனி சொந்தக்காரர்கள், பாகஸ்தர்கள், கம்பெனிகள் ஆகியவை உட்பட அவ்வழக்குகளில் சம்பந்தப்பட்டிருந்த பல்வேறு தரப்பினருக்கு மொத்தம் 60,900 ரூபாய் அபராதம் விதித்தது. பரஸ்பர சட்டத்தில் 23 (1-பி) பிரிவின் பிரகாரம், சுமார் 7146 ரூபாய் மதிப்புள்ள அந்நிய நாணயச் செலாவணியைப் பறிமுதல்செய்யும்படி உத்தரவிடப் பட்டது (ஆனால் இதுவரையில் மீறப்பட்டு உபயோகப் படுத்தப்பட்ட தொகை எவ்வளவு என்ற விபரம் தரப்படவில்லை.—ஆர்).

இது தவிர சில தரப்பினருக்கு, வெளிநாடுகளில் அவர்களுடைய கணக்கில் இருந்துவரும் இருப்புத் தொகைகளை இந்தியாவுக்கும் கொண்டு வரும்படியும் உத்தரவிடப் பட்டுள்ளது.

## கிண்டி தொழில் நுட்பக் கல்லூரி

### டைரக்டர் நியமனம்

பம்பாய், ஆக 7—

கிண்டியிலுள்ள இண்டியன் இன்ஸ்டிடியூட் ஆப் டெக்னலஜியின் டைரக்டராக பம்பாய் விக்டோரியா ஜூபிலி டெக்னிகல் இன்ஸ்டிடியூட் முதல்வர் திரு. பி. சென்குப்தா நியமனம் செய்யப்பட்டுள்ளார்.

கிண்டியில் தற்காலிகமாக நிறுவப்பட்டிருக்கும் இத்தொழில் நுட்பக் கல்லூரி சென்னை, மைசூர், ஆந்திரம், கேரளம் ஆகிய நான்கு தென் ராஜ்யங்களுக்கும் சேர்த்து அமைக்கப்படுவதாகும்.

80 லட்சம் மதிப்புடைய விஞ்ஞான, தொழிற்சாலைக் கருவிகள் தருவதன் மூலம் மேற்கு ஜெர்மனி அரசாங்கம் இத்தொழில் நுட்பக் கல்லூரிக்கு உதவுகிறது அத்துடன் ஜெர்மன் தொழில் நிபுணர்கள், பேராசிரியர்கள் சேவை இக்கல்லூரிக்குக் கிடைக்கும்; இந்திய ஆசிரியர்களுக்கு ஜெர்மனியில் மேற் பயிற்சியும் அளிக்கப்படும்.

## உப்பு பாத்தி போடுவோருக்கு நிலம் ஜாரிசெய்ய கோரிக்கை

ஆறுமுகனேரி, ஆக. 5—

இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் ஆறுமுகனேரி கிளையின் சார்பில் 3-8-59-ல் நடந்த பொதுக்கூட்டத்தில் சேர்ந்தாங்குளம் புறம்போக்கு நிலத்தில் உப்பு பாத்திகள் போட்டு அனுபவித்து வருகிற தொழிலாளருக்கு அந்த நிலத்தை ஜாரி செய்ய வேண்டுமென்றும் தாராங்கதாரா கெமிக்கல் கம்பெனியில் வேலைசெய்கிற தொழிலாளர்களின் வேலையைக் காயமாக்கும்படி கோரியும் தீர்மானங்கள் நிறைவேறின.

# காங்கிரஸ் துரியோதனுதிகளை கம்யூனிஸ்ட் பஞ்சபாண்டவர்கள் வீழ்த்துவார்கள்

## காஞ்சியில் தோழர் கோதண்டராமன் எம். எல். ஏ. பேச்சு

காஞ்சிபுரம், ஆக 5—

கேரளத்திற்கு இழைக்கப்பட்ட அநீதியைக் கண்டித்து கம்யூனிஸ்ட் கட்சி அலுவலகத்திலிருந்துஊர்வலம்புறப்பட்டது ஊர்வலத்திற்கு தோழர் ஏ சி குருசாமி தலைமைவகித்துச் சென்றார்.

பின்னர் இரட்டை மண்டபத்தில் தோழர் ஆர். கிருஷ்ணன் தலைமையில கண்டனக் கூட்டம் நடைபெற்றது. தோழர்கள் ஏ. கே. அன்வார் எம். சி., வி. சுப்பிரமணியம் ஆகியோர் பேசினார்கள்.

கடைசியாக தோழர் வி. கே. கோதண்டராமன் எம். எல். ஏ. பேசினார். அவர் பேசுகையில், "சின்னம் சிறிய கேரளத்தில், கம்யூனிஸ்ட் அரசாங்கம் 7000 நியாயவிலைக் கடைகளைத் திறந்தது. ஆனால் 3½ கோடி மக்களுடைய சென்னை மாநிலத்தில 1000 நியாயவிலைக் கடைகளைத்தான் காங்கிரஸ் அரசாங்கம் திறந்தது. இந்த எம் காங்கிரஸ் மாநிலங்களைவிட மக்களுக்கு அதிகமான அளவில் 28 மாத காலங்களில் நல்ல பல நன்மைகளைச் செய்த கேரள அரசாங்கத்தை, துரியோதனாதிகள் சூழ்ச்சி செய்து பஞ்சபாண்டவாகளைக் காட்டுக்கு அனுப்பியது போல காங்கிரஸ்காரர்கள் சூழ்ச்சி செய்து ஜனாதிபதி ஆட்சியைக் கொண்டுவந்து, மக்கள் அரசாங்கத்தைக் கவிழ்த்துவிட்டார்கள், என்றாலும் பஞ்சபாண்டவர்கள் எப்படி துரியோதனாதிகளை வீழ்த்தி வெற்றி கண்டார்களோ அப்படி கம்யூனிஸ்ட் கட்சி இந்திய ஜனநாயக சக்திகள் காங்கிரஸ் கட்சியை வீழ்த்தி வெற்றி வாகை சூடும்" என்று கூறினார். (ந. நி.)

## செங்கற்பட்டு ஜில்லா அச்சுத் தொழிலாளர் சங்கத்தின் வெற்றி

சென்னை, ஆக. 7—

தாம்பரம் லோகவாணி அச்சகத்தில் வேலை செய்து வந்த ராஜமாணிக்கம்என்னும் தொழிலாளி அநியாயமாய் வேலையிலிருந்து நீக்கப்பட்டார். சங்கத்தின் காரியதரிசி தோழர் எஸ் தீனதயாளு, மானேஜ்மெண்டாருடன் நேரடியாகப் பேசியதின் பயனாய், மேற்படி தொழிலாளியை மீண்டும் வேலைக்கு வைத்துக்கொள்வதற்கு நிர்வாகத்தினர் இசைந்தனர். அதன்படி 6-8-59 முதல் ராஜமாணிக்கத்திற்கு மீண்டும் வேலை கிடைத்தது.

## சிவகாசி தீப்பெட்டி தொழிற்சாலையில் தீ விபத்து

### இதுவரை 7 பேர் மரணம்

மதுரை, ஆக 7—

சிவகாசியில் கலர் மாச் (தீப்பெட்டி) பாக்டரியில் புதன் கிழமை யன்று தீவிபத்தில் 4 பெண்கள் வெந்து மாண்டனரென்பதும் மேற்கொண்டு ஒரு பெண் தொழிலாளி சிவகாசி ஆஸ்பத்திரியில் சிகிச்சை பெறுகையில மாண்டாரென்பதும் தெரிந்ததே.

மேலும் ஒரு பெண்ணும் ஒரு ஆணும (இருவரும் தொழிலாளர்) ஆஸ்பத்திரியில் நேற்று மாண்டனர். ஆகவே தீ விபத்தால் இதுவரை மாண்டவர் எண்ணிக்கை ஏழு

தீக்காயங்களுடன் மற்றிரு பெண்கள் இங்குள்ள ஓர் ஆஸ்பத்திரியில் சிகிச்சை பெறுகிறார்கள்.

ராமநாதபுரம் ஜில்லா போலீஸ் சூப்பரின்டெண்டு நேற்று சிவகாசி பாக்டரிக்குச் சென்று தீ விபத்தின் காரணங்களைப் பற்றி புலன் விசாரித்தார். (பி. டி. ஐ.)

# நிலச் சீர்திருத்தத்துறையில் காங்கிரஸ் செய்ததென்ன ?

## தீர்மானங்களை அமுல் நடத்த துணிந்தீர்களா?

### பிரதமர் நேருவுக்கு இ. எம். எஸ். கேள்வி

### நாங்கள் சட்டம்கொண்டுவந்தோம் பிற்போக்காளர் கலகம் செய்தனர்

### தங்கள் சர்க்கார் நீக்கப்பட்டதின் காரணம் பற்றியும் விளக்கம்

புதுடில்லி, ஆக. 7—

"விவசாய சீர்திருத்தங்கள் பற்றிய நாகபுரி காங்கிரசின் தீர்மானங்களைப் பிரதமர் நேரு, அமுல் நடத்துவதற்கு எப்பொழுதாவது உறுதியுடன் முயற்சி செய்வாரேயானால், நாங்கள் கேரளத்தில் சமாளிக்க வேண்டி யேற்பட்ட அதே "வெகுஜனக் கிளர்ச்சி"யை, நாட்டின் இதர 13 ராஜ்யங்களிலும் அவர் சமாளிக்கவேண்டியேற்படும்", என்று தோழர் இ. எம். எஸ். நம்பூதிரிப்பாட் இன்று மாலை இங்கு ஒரு பொதுக்கூட்டத்தில் பேசுகையில் குறிப்பிட்டார்.

தோழர் நம்பூதிரிப்பாட் மேலும் பேசுகையில் கேரளத்தில் ஏற்பட்ட "வெகுஜனக் கிளர்ச்சி", நிலப்பிரபுக்கள், தோட்ட முதலாளிகள், பாங்கு முதலாளிகள் ஆகியோர் கம்யூனிஸ்ட் சர்க்காரின் ஜனநாயக சீர்திருத்தங்களுக்கெதிராக நடத்திய "கிளர்ச்சியே" என்று குறிப்பிட்டார்.

தன்னுடைய சொந்தத் தீர்மானங்களின் சாராம்சத்திற் கேற்பவே இன்று கேரளத்தில் பிரதமர் நேரு செயல்புரிய ஆரம்பித்தால், கம்யூனிஸ்ட் சர்க்காரை எதிர்ப்பதற்காகக் காங்கிரசுடன் சேர்ந்து நின்ற அதே சக்திகளே காங்கிரஸையும் எதிர்ப்பார்கள். முன்னேற்றப் பாதையில் செல்ல விடாமல் பிற்போக்கு சக்திகள் குறுக்கே நிற்கும் ஒரு சாதாரணப் பிரச்சினையே இது, என்று இ. எம். எஸ். மேலும் குறிப்பிட்டார்.

#### காங்கிரஸ் குட்டு அம்பலமாகிவிடும் !

"எங்களுடைய சர்க்கார் விவசாய உறவு மசோதாவை ராஜ்ய சட்டசபையில் ஜூன் 10ந் தேதியன்று நிறைவேற்றியது. அதற்குப் பிறகு 2 நாட்களுக்குள்ளேயே, ஜூன் 12ந் தேதியன்று எதிர்க் கட்சியினர் "நேரடி நடவடிக்கை"யை ஆரம்பித்தனர், என்பது மிகவும் குறிப்பிடத்தக்க விஷயம்.

"மேலும், அந்த சட்டம் ஜனாதிபதியின் அங்கீகாரத்திற்காக ஜூலை 28-ந் தேதியன்று அனுப்பப்பட்டது. ஜூலை 31ந் தேதியன்று நாங்கள் பதவியிலிருந்து வெளியேற்றப்பட்டோம்" என்றும் நம்பூதிரிப்பாட் கூறினர்.

"கம்யூனிஸ்ட் மந்திரி சபை 5 வருடங்கள் முழுவதும் பதவியில் இருப்பதற்கு அனுமதிக்கப்பட்டு, அதனுடைய திட்டங்கள் அமுல் நடத்தப்படுவதற்கு வாய்ப்பும் அளிக்கப்படுமேயானால், அப்பொழுது காங்கிரஸ்தான் பிரகடனப்படுத்திய கொள்கைகளையே எவ்வாறு அமுல் நடத்தத் தவறியுள்ளது என்பது வெட்டவெளிச்சமாக அம்பலமாகிவிடும், என்று கருதியதால்தான் காங்கிரஸ் கேரளத்தில் பிற்போக்கு சக்திகளுடன் கை கோர்த்தது" என்று நம்பூதிரிப்பாட் விளக்கினார்.

#### ஊறுகாய்ப்பானையில் !

விவசாய சீர்திருத்தங்கள் சம்பந்தமாகக் காங்கிரஸ் பரதன் குமரப்பா கமிட்டியை ஏற்படுத்தியதைப்பற்றி இ. எம். எஸ், குறிப்பிட்டு, அந்தக் கமிட்டியின் அறிக்கை சுமார் 10 வருட காலம் ஊறுகாய்ப் பானையில் போட்டு மூடி வைக்கப்பட்டிருந்தது பிறகுகாங்கிரஸ்சர்க்கார்கள் அந்த சீர்திருத்தங்களை 1959 இறுதிக்குள் கொண்டுவருவதாக வாக்களித்தனர் இந்த ஆண்டு முடிவதற்கு இன்னும் 5 மாதங்களே உள்ளன. இன்னும் எந்த ராஜ்ய சர்க்காரும் இந்தத் துறையில் எவ்வித நடவடிக்கையையும் எடுத்துக் கொள்ளவில்லை, என்பது உங்களுக்கே தெரியும்," என்றும் நம்பூதிரிப்பாட் குறிப்பிட்டார்.

### ஐக் விஜயம்

வாஷிங்டன் ஆக 7—

ஆக. 28-ல் ஜனாதிபதி ஐஸனோவர் லண்டன் புறப்படுவார், செப். 2-ல் பாரிஸ் விஜயம் செய்வார் என அதிகாரபூர்வமாக அறிவிக்கப்பட்டுள்ளது மேற்கு நாடுகளின் தலைவர்களுடன் உலக நிலவரம் குறித்து விவாதிப்பதற்காக அவர் செல்லுகிறார்.

பிரிட்டிஷ் பிரதமருடன் பேச்சுவார்த்தைகள் நடத்திய பின் பிரெஞ்சு ஜனாதிபதி டிகாலை அவர் சந்திப்பார்.

### ஜனநாயக சக்திகளை ஒன்று திரட்டுவோம்

#### கேரள கம்யூனிஸ்ட் மந்திரி சபையின் சாதனைகளைப் பாதுகாப்போம்

#### இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி மத்திய நிர்வாகக் கமிட்டி ஊர்ஜிதம்

புதுடெல்லி, ஆக 7—

இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் மத்திய நிர்வாகக் கமிட்டி இன்று கேரள நிலைமையை குறித்து விவாதிக்கும்போது, பாராளுமன்ற ஜனநாயகத்தின் மீது தனக்குள்ள நம்பிக்கையை மீண்டும் ஊர்ஜிதம் செய்தது.

கட்சியின் தலைவரொருவர் கூறியதாவது: அமிர்தசரஸில் வகுத்துக் கொண்ட கொள்கையிலிருந்து மாறவேண்டிய எண்ணம் அறவே கம்யூனிஸ்ட் கட்சிக்கு கிடையாது என்றார். அவர் மேலும் கூறியதாவது: கேரளத்தில் கம்யூனிஸ்ட் கட்சியின் இருபத்தெட்டு மாதகால ஆட்சியில் மக்களுக்கு கிடைத்த நலன்களை பேணிக்காப்பதுதான், இன்று கட்சியின் முன்னுல் உள்ள மிகப்பெரும் கடமையாகும் என்றார்.

நாட்டிலுள்ள ஜனநாயக சக்திகளையும் காங்கிரசினுள்ளிருக்கும் ஜனநாயக எண்ணங்கொண்டோரையும் சேர்த்து ஓரணியில் திரட்டி பிற்போக்கு சக்திகளுக்கெதிராக ஜனநாயகத்தையும் பாராளுமன்ற கொள்கைகளையும் பாதுகாக்க வேண்டிய திட்டத்தையும் நிர்வாகக் கமிட்டி தீர்மானித்திருப்பதாகத் தெரிகிறது. கமிட்டியின் நாளைய கூட்டத்திற்குப் பிறகு முடிவுகள் வெளியிடப்படுமென்றும் தெரிகிறது.

#### குருஷ்சேவ்-ஐஸன்ஹோவர் சந்திப்பு

குருஷ்சேவ்-ஐஸன்ஹோவர் விஜயத்தை வரவேற்று, 'இது மாபெரும் முன்னேற்றமாகும்' என்று கம்யூனிஸ்ட் கட்சியின் மத்திய நிர்வாகக் கமிட்டி கூறுகிறது 'உலக நெருக்கடியை தீர்க்க இந்த விஜயம் உதவுமென்றும் அமெரிக்கா-சோவியத் யூனியன் உறவுகளை வளர்க்குமென்றும் அதுவே உலக சமாதானத்திற்கு பேருதவி புரியுமென்று நாங்கள் நம்புகிறோம்" என்று கம்யூனிஸ்ட் கட்சியின் தலைவர்களிலொருவர் கூறியிருக்கிறார். —பி டி ஐ

### ஏ. ஐ. டி. யூ. ஸி. செயற்குழு

புதுடெல்லி, ஆக. 6—

அகில இந்திய தொழிற்சங்க காங்கிரசின் செயற்குழு கூட்டம் டெல்லியில் ஆகஸ்ட் 8, 9 தேதிகளில் கூடவிருப்பதாக அறிவிக்கப்பட்டிருக்கிறது. தோழர் மிராஜ்கர் (ஏ. ஐ. டி. யு. சி. தலைவர்) தலைமை வகிப்பார். தோழர் எஸ். ஏ. டாங்கே சென்னையில் நடைபெற்ற 17-வது தொழில் உறவு மகாநாட்டைப் பற்றியும், ஸ்தாபன சம்பந்தமான அறிக்கையும் சமர்ப்பிப்பார். (ஐ.பி.ஏ)

### மார்க்கெட் நிலவரம்

#### தங்கம், வெள்ளி

சென்னை, ஆக. 8—

| | |
|---|---|
| சவரன் | ரூ 79 0-0 |
| தங்கப் (ரெடி) | ரூ. 121-14-0 |
| மூளை தங்கம் | ரூ. 118-12-0 |
| வெள்ளி 100 தோலா எடை | ரூ. 202 8-0 |
| வெள்ளி 1 ரூ. எடை | ரூ. 2 1-0 |

#### மணிலா பயறு

| | |
|---|---|
| 531 ராத்தல் கொண்ட பாரம் 1-க்கு விற்பனை வரி உட்பட உயர்ந்த ரகம் | ரூ 185 |
| "பட்டாணி" | ரூ. 180 |

#### மணிலா எண்ணெய்

| | |
|---|---|
| 500 ரா. கொண்ட பாரம் 1-க்கு எக்ஸ்பெல்லர் ரெடி மதராஸ் கிடங்கு டெலிவரி 3 சதவீதம் எப்.ஏ. (மொத்தவிலை) | ரூ. 345 |
| | 342-50 |
| ஆகஸ்ட் | 307-50 |
| செப்டம்பர் | 335-50 |
| டிசம்பர் | |

#### விளக்கெண்ணெய்

| | |
|---|---|
| 500 ரா. பாரம் 1-க்கு (மதராஸ் கிடங்கு டெலிவரி) திருப்பத்தூர் | ரூ. 325 |
| சேலம் "தாமரை" "அன்னம்" (37½ ரா. டின் உள்பட) | ரூ. 25-50 |

#### தேங்காய் எண்ணெய்

| | |
|---|---|
| (37 ரா. கொண்ட பாரம் 1-க்கு விற்பனை வரி தனி) கொல்லம் சரக்கு எம்.எஸ். மார்க்கு | 40-00 |
| அம்பு மார்க்கு | 39-50 |
| ராஜா மார்க்கு | 39-50 |

#### சர்க்கரை

(2 அந்தர்)

| | |
|---|---|
| சாமல்கோட்டை | 114-00 |
| பாரி என் | 114-00 |
| உப்பரு | 114-00 |

### இறுதி ஆட்டத்தில் கோச் பாக்டரி

சென்னை, ஆக. 8—

இன்று மாலை நடந்த எம். யூ ஸி. கால் பந்தாட்ட அரை-இறுதி போட்டியில் ஸ்போர்டிங் எங்ஸ்டர்ஸ் பிரமாதமாக ஆடி ரஸிகர்களை கவர்ந்தபொழுதிலும் கோல் போடும் மையத்தில் முன் ஆட்டக்காரர்கள் சரிவர ஆடாததால், இண்டகரல் கோச் பாக்டரி கோஷ்டியிடம் இரண்டு கோல்கள் வாங்கி தோற்றது கோச் பாக்டரி கோஷ்டி ஆட்டக்காரர்கள் சரிவர இணைந்து ஆடவில்லை. ஆனல் முன் ஆட்டக்காரர்கள், பின் ஆட்டக்காரர்கள் சுறுசுறுப்பாக கடைசிவரை ஆடினர்கள். முதல் சோல் இடைவேளை விட ஒரு நிமிடம் இருக்கும்போது கோச் பாக்டரி வலதுகடைசி ஆட்டக்காரர் டிகிரஸ் தனக்கு கிடைத்த பந்தை அபாரமாக கோல் கம்பம் நோக்கி அடித்து கோலாக்கினர். இரண்டாவது கோல் ஆட்டம் முடிய சில நிமிஷங்களுக்குமுன் டிகிரஸ், கன்னியப்பன் அளித்த பந்தை எடுத்து உடனே அடித்து கோலாக்கினர். எங்ஸ்டர்ஸ் கோஷ்டி இடைவேளைக்கு முன் 'பெனல்டி' சந்தர்ப்பம் கிடைத்தது. அந்தோணி சந்தர்ப்பத்தை பயன்படுத்தியும் பிரயோஜனமில்லாமல் போய்விட்டது. அவர் அடித்த பந்தை அபாரமாக கோல் காப்பாளர் ஸ்டீபன்ஸ் தடுத்துவிட்டார். எங்ஸ்டர்ஸ் கோஷ்டி நல்ல ஆட்டம் ஆடியும் கோல் கம்பம் அருகே மயங்கி விழுந்தவர்களைப் போல ஆடினர்கள். ஞாயிறு ஆட்டம் தென்னிந்திய ரெயில்வேக்கும், எம். ஈ. ஜி. பங்களூருக்கும் நடைபெறும்.

என். கே. பாலகிருஷ்ணன்

### கேரளாவில்

### ஜனதிபதி ஆட்சியை வரவேற்று காங்கிரஸ் கொண்டுவந்த தீர்மானம் தோற்றது !

#### பம்பாய் முனிசிபல் கார்ப்பரேஷனில் சில பி. சோ. கவுன்சிலர்களின் துரோகம் !!

பம்பாய், ஆக. 3—

'பம்பாயில் மத்திய அரசாங்கம் தலையிடவேண்டும்' என்று ஏற்கனவே கொண்டுவந்த தனது தீர்மானத்திற்கு இன்று ஒரு திருத்தம் கொண்டுவந்தது காங்கிரஸ். "கேரளாவில் ஜனதிபதி ஆட்சியை வரவேற்று" அந்த திருத்தம் இருந்தது இதை எதிர்த்து சகல கவுன்சிலர்களும் ஓட்டளிக்கவேண்டும் என்ற சமிதி தீர்மானம் (Mandate) செய்திருந்தபோதிலும் அதை மீறி பிரஜா சோஷலிஸ்ட் கட்சியைச் சேர்ந்த ஹாரிஸ், மாதவன், வார்தே, டாலகர், ராம் ஜோஷி என்ற சமிதி கவுன்சிலர்கள் நடுநிலைமைவகித்து சமிதிக்கு துரோகம் செய்தனர் ஜனசங்கத்தைச் சேர்ந்த கானேட்கா என்ற கவுன்சிலரும் ஓட்டளிக்கவில்லை. ஒரு பிரஜா சோஷலிஸ்ட் கவுன்சிலர் காங்கிரஸ் தீர்மானத்தை ஆதரித்து ஓட்டளித்தார் என்றுலும் காங்கிரஸுக்கு 51 ஓட்டுகளும், சமிதிக்கு 55 ஓட்டுகளும் கிடைத்ததால் காங்கிரஸ் தீர்மானம் தோற்றது. (ந. நி)

### ராஜஸ்தான் ஜனசங்கில் தீவிர கருத்து வேறுபாடு

#### கேரளத்தில் மத்திய தலையீட்டை ஆதரித்ததால் வந்த விளைவு

ஜெய்ப்பூர், ஆக. 6—

கேரள நிலைமை குறித்து ஜனசங்கடைட்பிடித்தகொள்கையின் காரணமாக ராஜஸ்தான் ஜனசங்கினுள்ளே தீவிர கருத்து வேறுபாடு ஏற்பட்டுள்ளது. ஜனசங் கேரளத்தில் மத்தியத் தலையீடு வேண்டுமென்றும் ஜனதிபதி ஆட்சியை ஆதரித்துக் கூறியதும் தெரிந்ததே.

ராஜஸ்தான் மாநிலத்தில் ஜனசங்கின் ஒரு பகுதியினர் திரு மாடன் சிங் எம்.எல்.ஏ. தலைமையில் கட்சியின் போக்கு தவறு என்று கூறுவதாகத் தெரிகிறது.

கேரளத்தில் மத்திய சர்க்கார் தலையிடுவதென்பது, காங்கிரஸ் அல்லாத ஒரு மந்திரி சபை இந்த நாட்டில் இருக்கக்கூடாது என்ற காங்கிரஸின் எதேச்சாதிகார எண்ணத்தாலாகும் என்று திரு மாடன் சிங் தலைமையிலுள்ளோர் கூறுவதாகத் தெரிகிறது. காங்கிரசின் வால்பிடிக்கும் போக்கில் ஜனசங் போகக் கூடாதென்று அவர்கள் தீவிரமாகக் கருதுவதால், வருகிற ராஜ்ய நிர்வாகக் கமிட்டிக் கூட்டத்தில் இந்த முரண்பாடுகள் தீர்வதற்குரிய சூழ்நிலை இருப்பதாகத் தெரியவில்லை. (ஐ. பி. ஏ.)

### சர்க்கரை விலை இறங்கும்

புதுடில்லி, ஆக. 6—

சர்க்கார் எடுத்த நடவடிக்கையின் விளைவாக சர்க்கரை விலை இறங்குமென்று மத்திய உணவு மந்திரி ஏ. பி. ஜெயின் இன்று அறிவித்தாரென்று தெரிகிறது.

### சோக நாடகம் என்பது உண்மை

#### கேரளத்தில் மத்திய ஆட்சி தலையிடுபற்றி "குமுதம்"

சென்னை, ஆக. 7—

10-8-59 நாளிட்ட "குமுதம்" இதழ் கேரளத்தில் மத்திய தலையீடு பற்றி தனது தலையங்கத்தில் எழுதியுள்ளவற்றில் சில பகுதிகள் தரப்படுகின்றன:

"சோக நாடகம் அதன் முடிவை நெருங்கிக்கொண்டிருக்கிறது" என்றார் மலையாள மந்திரியொருவர்—கேரளத்தில் தலையிடுவதெனப் புதுடில்லி தீர்மானித்துவிட்டதாகத் தகவல் வந்ததும் இதைவிடப் பொருத்தமாக அந்த நிலைமையை ஒருவர் எப்படி வர்ணித்திருக்க முடியும்?

ஆம், நடந்தது ஒரு நாடகம் என்பது மெய்தான். அது சோகமாக முடிந்துவிட்டது என்பது உண்மைதான்.

...எப்படிப் பார்த்தாலும் மத்திய அரசாங்கத்தின் தலையீடு புத்திசாலித்தனமாகத் தெரியவில்லை. கல் எறிந்தவர்களுக்கும், பஸ் எரித்தவர்களுக்கும் அடிபணிந்த அளவில் கோழைத்தனமாகவும் கம்யூனிஸ்டு அரசாங்கம் என்ற காரணத்தால் கேரள சர்க்காரை நீக்கிய வகையில் சுயநலமானதாகவுமே தோன்றுகிறது அதன் நடத்தை.

ஒரு சோக நாடகம் நடந்தது போதும். இரண்டாவது நிகழ்ந்தால தாங்காதே நமது ஜனநாயகம்?

### கேரளம்: நவம்பருக்கு பின்னரே தேர்தல்

#### தேர்தல் கமிஷனரின் சூசக அறிவிப்பு

திருவனந்தபுரம், ஆக. 7—

இந்த ஆண்டு நவம்பர் மாதத்துக்குள் புதிய வாக்காளர் பட்டியல் தயாரிப்பு வேலை முடிக்கப்பட வேண்டுமென உத்தரவிடப்பட்டிருக்கிறதெனவும் தேர்தலுக்கான தேதியை ஜனாதிபதி தான் நிர்ணயிக்க வேண்டுமெனவும் வாக்காளர் பட்டியல் திருத்தும் வேலை நவம்பருக்குள் முடியாதெனவும் பிரதம தேர்தல் கமிஷனர் கே வி. கே. சுந்தரம் இன்று நிருபர்களிடம் அறிவித்தார்

ஏற்கனவே பட்டியல்களில் பாதி திருத்தப்பட்டிருக்கிறதெனவும் மொத்தமுள்ள 114 தொகுதிகளில் 56 தொகுதிகளிலுள்ள வாக்காளர் பட்டியல்கள் இப்பொழுது அச்சில் இருக்கிறதெனவும் அவர் கூறினர்

தேர்தல் செலவுகள் 80 லட்சம் வரை ஆகுமெனவும் இச்செலவு முழுவதையும் ராஜ்ய அரசாங்கமே ஏற்க வேண்டுமெனவும் சென்ற தடவை பாதிச் செலவை ராஜ்ய அரசாங்கமும் மற்ற பாதியை மத்திய அரசாங்கமும் ஏற்றனவென்றும் அவர் கூறினர். —ந. நி.

### தேர்தல் தினத்தன்று புதுவையில் விடுமுறை

காரைக்கால், ஆக, 6—

புதுவைத் தேர்தல்களை ஒட்டி புதுவை ராஜ்யத்தில் ஆக. 11ந் தேதியும், மாஹியில் ஆக 12ந் தேதியும், ஏனமில் ஆக. 13ந் தேதியும், காரைக்காலில் ஆக 14 தேதியும் விடுமுறை விடப்படும் என்று புதுவை ராஜ்ய சர்க்கார் உத்தரவிட்டுள்ளது.

### சட்ட சபைகளின் எதிர்க் கட்சித் தலைவர்கள் மகாநாடு

#### ஆகஸ்டு 29, 30-ல் நடைபெறும்

பம்பாய், ஆக. 7—

ஆக. 29, 30 தேதிகளில் ஆறு ராஜ்ய அசெம்பிளிகளின் எதிர்க் கட்சித் தலைவர்கள் மாநாடொன்றை சம்யுக்தமகாராஷ்டிர சமிதி (பம்பாய் அசெம்பிளியிலுள்ள எதிர்க்கட்சி) கூட்டியுள்ளது.

எதிர்க்கட்சிகளுக்கான ஒழுங்கு விதிகள் இம்மாநாட்டில் வகுக்கப்படும் எனத் தெரிகிறது

எதிர்க்கட்சிகளின் உரிமைகள் பற்றியும் விவாதிக்கப்படும்.

மேற்கு வங்காளம், உ. பி, ஆந்திரம், மைசூர், சென்னை, ஜம்மு-காஷ்மீர் ஆகிய ராஜ்ய அசெம்பிளிகளின் எதிர்க்கட்சித் தலைவர்கள் இம்மாநாட்டில் கலந்துகொள்வதற்குச் சம்மதம் தெரிவித்திருக்கின்றனர்.

### அமெரிக்காவில் 142 பவுண்டு எடையுள்ள 'பேடில்வீல்' வானவெளியில் பறக்கவிடப்பட்டது

#### ஓராண்டு பயணம் செய்யும் என அறிவிப்பு

வாஷிங்டன், ஆக. 7—

வானவெளியில் நிலைமைகளைப் பற்றி மிகவும் உதவிகரமான விஞ்ஞான உண்மைகளை அறியும் வசதிகளுடன்கூடிய மிகப்பெரிய செயற்கைக் கிரஹம் ஒன்றை இன்று அமெரிக்கா வெற்றிகரமாகப் பறக்கவிட்டது.

'பேடில்வீல்' என்று அழைக்கப்படும் இச்செயற்கைக்கிரஹம் 142 பவுண்டு எடையுள்ளது.

நிலத்திலிருந்து 23 000 மைல்கள் வான வெளியில் செல்லும். அதனுடைய மிகச் சமீப தூரம் பூமியிலிருந்து 160 மைலாக இருக்கும். இது வெளி மண்டலத்தில் சுமார் ஓராண்டு காலம் சுற்றக்கூடும் எனவும் கூறப்படுகிறது.

புளோரிடாவிலுள்ள கேப் கனவெராலிலிருந்து இன்று அதிகாலை பறக்கவிடப்பட்ட இந்த செயற்கைக் கிரஹம் இப்பொழுது பூமியைச் சுற்றி வெளி மண்டலத்தில் இருப்பதாக தேசிய வானவெளி நிர்வாக ஸ்தாபனம் அறிவித்துள்ளது.

### கண்டன தினம்

பாபநாசம், ஆக. 7—

இங்கு ஆக. 3-ந் தேதி கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் கண்டனப் பொதுக்கூட்டம் நடைபெற்றது. கே. எஸ். பி. அய்யா தலைமை வகித்தார். எஸ். கிருஷ்ணமூர்த்தி, சே. வீரய்யன், ஏ. எம். கோவிந்தராசன் முதலியோர் கேரள சர்க்கார் சாதனைகளையும், மத்தியத் தலையீட்டின் அநீதியையும் பற்றி விவரமாக எடுத்துக் கூறினர்கள். பி. ஆர் சீனிவாசன் தீர்மானங்களைப் பிரேரேபித்தார். தாலுகாவின் பல்வேறு பகுதிகளிலிருந்தும் ஊர்வலங்கள் வந்தன.



### நடக்கஇருப்பவை

**இளங்கோ மன்றம் தி.நகர்**

மன்றத்தின் சார்பாக திரு இரா. கோபாலன் தலைமையில் 'திலகர் தினம்" கொண்டாடப்படும். விழா ராமனுதன் தெரு சாரதா பெண்கள் பள்ளியில் காலை 8-30க்கு துவங்கும் ராஜமடம் ராமமூர்த்தி, புதுவைஇதயவேந்தன் பேசுவார்கள்.

**மாணிக்கம் நினைவுமன்றம் பெரம்பூர்**

சேவாத்தமன் பண்ணையில் திரு. எஸ். பி. கிருஷ்ணன் தலைமையில், திரு. சின்ன அண்ணமலை, வெங்கட்டராமன், ஞானதாசன் இ. வே. மணி, கோ. தேவராசன் பேசுவார்கள்.

**சாந்தி சேனை பயிற்சி முகாம் வண்ணுரபேட்டை**

வண்ணுரப்பேட்டை போலீஸ் ஸ்டேஷன் பின்புறமுள்ள தட்சிணு மூர்த்தி கோவிலில் சென்னை சாந்தி சேனை பயிற்சி முகாம் ஆலோசனைக் கூட்டம் காலை 9-மணிக்கு நடைபெறும். தமிழ்நாடு சர்வோதய மண்டல் உறுப்பினர், சென்னை லோக் சேவக் திரு. க. வீரப்பன் தலைமை வகிப்பார்.

சென்னை சமாதானக் கமிட்டி பொது உறுப்பினர்கள் கூட்டம் "உலக சமாதான கவுன்சில் பத்தாவது ஆண்டு விழா கொண்டாடுவது பற்றி ஆலோசிப்பதற்காக", 9-8-59 மாலை 6 மணிக்கு டாக்டர் சி. ஆர். கிருஷ்ணப்பிள்ளை அவர்கள் தலைமை வகிப்பார். இடம் நெ. 3, வெஸ்ட்காட் ரோட் ராயப்பேட்டை.

### கட்சிப் பிரசுரங்கள்

கட்சிப் பிரசுரங்கள் 42-ன் விலை ரூ. 4 என்று விளம்பரம் கொடுக்கப்பட்டிருந்தது. இது தவறு. ஒரு 'செட்'டில் 34 புத்தகங்களே உண்டு. விலை ரூ. 4.



### வானொலி

#### சென்னை-1

10—8—59

**முதல் ஒலிபரப்பு**

6-55 மங்கள இசை 7-00 துதிப்பாடல்கள் 7-10 நிகழ்ச்சிக் குறிப்புகள், வானிலை அறிவிப்பு 7-15 தமிழில் செய்தி 7-30 எம். பாலசரஸ்வதி பாட்டு 8-00 மதுர கீதம் 8-15 ஒலிபரப்பு முடிவு.

**இரண்டாவது ஒலிபரப்பு**

12-30 நடுத்தரப்பள்ளிகளுக்கு 1-00 மாதர் நிகழ்ச்சி 1-30 கானமஞ்சரி 1-40 ஹிந்தியில் செய்தி 1-50 இசைச் செண்டு 2-00 தமிழில் செய்தி 2-10 For High Schools 2-40 வானிலை அறிவிப்பு ஒலிபரப்பு முடிவு.

**மாலை மூன்றுவது ஒலிபரப்பு**

5-30 ருக்மிணி மணி வீணை 6-05 பிராந்தியச் செய்திகள் 6-15 கிராம நிகழ்ச்சிகள் (திருச்சி அஞ்சல்) 7-15 தமிழில் செய்தி 7 30 For Universities Youth Forum Conducted by R. Bhaskaran 7-50 பிஸ்மில்லா கான் கோஷ்டி ஷனாய் 8 00 என். பாலசுப்ரமணியம் பாட்டு 8-30 கௌரி குப்புஸ்வாமி பாட்டு 9-00 கதம்பம் 9-15 ஸூபி கவிகள் 9.30 என். ரமணி புல்லாங்குழல் சித்தூர் கோபாலகிருஷ்ணன் வயலின் எஸ். வி எஸ் நாராயணன் மிருதங்கம் திருவில்வாமலை எஸ். விஜலாத்ரி ஐயர் கடம் 10-20 வானிலை அறிவிப்பு ஒலிபரப்பு முடிவு.

#### திருச்சி

10—8—59

**காலை முதல் ஒலிபரப்பு**

7-00 இசைக் கதிர் துதிப்பாடல்கள், 7-10 நிகழ்ச்சிக் குறிப்புகள், 7-15 தமிழில் செய்தி 7-30 பாட்டு 8-00 ஆங்கிலத்தில் செய்தி 8-15 ஒலிபரப்பு முடிவு.

**இரண்டாவது ஒலிபரப்பு**

12-30 நடுத்தரப் பள்ளிகளுக்கு 1-00 டி. பி. சிவன் பாட்டு 1-30 என்.கே.சி. புல்லாங்குழல் 1-40 ஹிந்தியில் செய்தி 1 50 குரல் இசை 2-00 தமிழில் செய்தி 2-10 For High Schools Introducing English Literature Merchant of Venice Readings from Verse On Heaven by Sri Walter Raleigh 2-40 இடைவேளை 2-45 வானிலை அறிவிப்பு ஒலிபரப்பு முடிவு.

**மாலை மூன்றுவது ஒலிபரப்பு**

4-45 விவிதபாரதி 5-45 இசைப் பயிற்சி 6-00 அறிவிப்புகள் 6-05 பிராந்தியச் செய்திகள் 6-15 கிராம நிகழ்ச்சிகள் 7-15 தமிழில் செய்தி 7-35 திரைபட இசை 7-45 இலக்கிய வாசகம் 7-55 இம்மாதப் பாடல் 8-00 தானவாத்ய கச்சேரி ஆர். கிருஷ்ணமூர்த்தி மிருதங்கம் குத்தாலம் ஏ. கன்னையன் கடம் காரைக்குடி நடேசய்யர் டோலக் 8-30 டி. பி. சிவன் பாட்டு 9-00 ஆங்கிலத்தில்செய்தி 9.15 அலி அக்பர் கான் ஸரோட் 9 30 பாட்டு 10.00 ஒலிபரப்பு முடிவு.



ஜனசக்தி அச்சகத்தில் அச்சிட்டு, வெளியிட்டவர் எஸ். கிருஷ்ணசாமி, ஆசிரியர்: ப. ஜீவானந்தம். முகவரி: 32. பிராட்வே, சென்னை-1, Janasakthi Broadway, Madras-1.